# மொழியும், நம் வழியும்



E. M. S.
நம்பூதிரிபாட்

# மொழியும் நம் வழியும்

மொழிப் பிரச்னை மீது நாடாளுமன்றத்தின் மக்கள் அவையில் ஆகஸ்ட் 1-ல் முடிவுறாத விவாதம் நடைபெற்றது. இந்த விவாதம் இந்தி திணிப்புக்கு எதிராக இந்தி பேசாத மக்கள் திட்டமிட்ட தாக்குதலை தொடர்ந்துள்ளதையே சுட்டிக்காட்டியது. இந்த எதிர்ப்பின் உச்ச கட்டமாக சமீபத்தில் நடைபெற்ற தென்னிந்திய முதலமைச்சர்களின் மாநாடு விளங்கியது. இந்த மாநாடு, ஜனதா அரசாங்கத்தின் மீது பல பிரதிபலிப்புகளை ஏற்படுத்தியுள்ளது.

இந்தி பேசாத மாநில மக்கள் இந்தியை ஏற்றுக் கொள்ளும் வரை ஆங்கிலமே உபயோகத்தில் இருக்கும் என்று பிரதமர் தனக்கு முன்பு பிரதமராக இருந்தவர்கள் பின்பற்றிய நிலையையே தற்போதைய பிரதமரும் வலியுறுத்தியுள்ளார்.

வணங்காமுடியாகத் திகழும் ராஜ்நாராயணன் கூட மக்கள் அவையில் உரையாற்றும் போது, இந்தி திணிப்பை நான் கடுமையாக எதிர்க்கிறேன். அந்தத் திணிப்பை எந்த மாநிலமாவது எதிர்த்துப் போராடினால் அத்தோடு சேர்ந்து போராட நானும் தயாராக இருக்கிறேன்'' என்றார்.

எனவே ஆங்கிலம் இருக்கும் இடத்தில் உடனடியாக இந்தியை வைத்திட வேண்டும் என வற்புறுத்தும் விவாதத்தினை யாரும் வலியுறுத்தவில்லை என்பதில் ஆச்சரியமில்லை.

என்றாலும் நாடாளுமன்றத்திலோ அல்லது வெளியிலோ அரசாங்க மொழி, தொடர்பு மொழி பற்றிய பிரச்னையில் ஒருமனதான நிலை எடுக்கப்பட்டு விட்டது என்று இதற்கு அர்த்தமல்ல.

## மும்மொழித் திட்டத்தையே வலியுறுத்தினர்

இந்திரா காங்கிரஸின் நாடாளுமன்ற உறுப்பினரான வசந்த சாத்தே என்பவர் மொழிப்பிரச்னை பற்றிய பிரேரணை ஒன்றை கொண்டுவந்தார். தமிழ்நாட்டின் அஇஅதிமுக அரசாங்கத்தையும் முதலமைச்சர் எம்ஜிஆரையும் கடுமையாக விமர்சித்தார். எம்ஜிஆரும் அவரது அமைச்சர்களும் தமிழ் வெறி கொண்டுள்ளனர் என்று அந்த காங்கிரஸ் உறுப்பினர் சாத்தே குற்றஞ்சாட்டினார். காரணம், தமிழிலேயே தங்கள் கையெழுத்துக்களை

போடுமாறு தமிழக அரசாங்க அதிகாரிகளுக்கு உத்திரவிட்டுள்ளதுதான். மத்திய அரசின் மும்மொழித் திட்டத்தை ஆங்கிலத்தையும் தமிழையும் கொண்ட இருமொழித் திட்டமாக தமிழக அரசு குறைத்துவிட்டது என்று சாத்தே குற்றம் சாட்டுகிறார்.

ஒருவிஷயம் எல்லோருக்கும் தெரியும். அதை சாத்தேயும் குறிப்பிட்டார். அது என்ன? தென்மாநில முதலமைச்சர்கள் மாநாட்டில் கூட ஒருபக்கம் சாத்தேயினுடையகட்சியைச்சேர்ந்த ஆந்திரப் பிரதேச முதலமைச்சர் சென்னாரெட்டியும், கர்நாடக முதலமைச்சர் தேவராஜ் அர்சும், மறுபக்கம் சுவரண்சிங் காங்கிரசை சேர்ந்த கேரள முதல் அமைச்சர் ஏ. கே. அந்தோணியும் எம். ஜி. ஆரை எதிர்த்தனர். மேலும், "காலஞ்சென்ற நேருவால் அளிக்கப்பட்ட உறுதிமொழி உண்மையான உணர்வோடு அமுல் படுத்தப்பட வேண்டும்; இந்தித் திணிப்பு இருக்கக் கூடாது; மும்மொழித் திட்டம் செயல்படுத்தப்பட வேண்டும்" என்று அந்த மூன்று காங்கிரஸ் முதலமைச்சர்களும் கூறியதாகவும் சாத்தே கூறினார்.

தற்போது ஸ்வரண்சிங் காங்கிரசில் உள்ள முன்னாள் நிதி அமைச்சர் சி. சுப்ரமணியம் சாராம்சத்தில் சாத்தே எடுத்த நிலையை ஏற்றுக் கொண்டார். அவர் "மும்மொழித் திட்டத்தை இந்தி பேசாத மாநிலங்கள் அமுல்படுத்தியுள்ளனவா என்று கேட்டார். மேலும் இந்தி பேசும் பகுதிகளில் எத்தனைபேர் மும்மொழித்திட்டத்தின்படி தென்னிந்திய மொழிகளையோ அல்லது வங்காளி மொழியையோ கற்றுள்ளனர். இந்தக் கடமையை செய்து முடிக்காமல் மற்றவர்மீது எந்தக் குற்றச் சாட்டும் சுமத்த அவர்களுக்கு உரிமையுமில்லை" என்றார்.

சாத்தேயையும் சுப்ரமணியத்தையும் எதிர்த்து அ இ அ தி மு க உறுப்பினர் பேசினார். அவர் பேசும்போது, "நாட்டை ஒன்றுபடுத்தியது ஆங்கிலமே! இந்திய மொழிகள் தாம் தேசிய மொழிகளாக இருக்க வேண்டும் என்பதில் வட இந்தியர்கள் மிகுந்த அக்கறை கொண்டிருப்பார்களானால், நான் கேட்கிறேன், தென்னிந்தியாவைச் சேர்ந்த இருமொழிகளை இந்தியோடு சேர்த்து ஏன் தேசியமொழிகளாக ஆக்கவில்லை? இந்தி மட்டும் ஆங்கிலத்தின் இடத்தைப் பெறமுடியாது" என்று கூறினார்.

## வழக்கமான வாதமும் மாறுபட்ட வாதமும்

மறுபக்கத்தில் இன்றைய சூழ்நிலையில் வாய்திறக்க முடியாத நிலையில் வைக்கப்பட்டிருந்தபோதிலும், ஆங்கிலத்தின் இடத்தை இந்திக்கு கொடுக்க வேண்டும் என வற்புறுத்தும்

யிக்கப்பட்ட 15 ஆண்டு காலம் 1965-வுடன் முடிவுற்றபோது அந்த ஆண்டின் மத்தியில் ஆங்கில ஆதரவாளர்களுக்கும் இந்தி ஆதரவா ளர்களுக்குமிடையே மோதல்ஏற்பட்டதுபோன்று மீண்டும் ஏற்படவிருக்கும் நாளே.

அப்படியொரு மோதல் எதிர்காலத்தில் ஏற்படுமா னல், அது தமிழகத்திற்குள் மட்டுமோ அல்லது தென்னிந் தியாவிற்குள் மட்டுமோ அல்லது இந்தி பேசாத கிழக்கு, மேற்கு, வடமேற்கு மாநிலங்களோடு மட்டுமோ நிற்காது.

அந்த மோதல் இந்தி பேசும் மாநிலங்களுக்குள்ளும் நடக்கும். ஏனென்றால்பிரதமர் சரியாகவே லோக்சபையில் குறிப் பிட்டது போல, ஆங்கிலத்தின் இடத்தை இந்தி பிடித்தால் அது இந்தித் திணிப்பு என்பது போலவே இந்தியாவில் ஆட்சி மொழியாக காலவரையின்றி ஆங்கிலம் நீடிப்பதும் ஆங்கிலத் திணிப்பாகும். இந்தி பேசாத மாநிலங்களின் மக்களால் இந்தி எதிர்க்கப்படுவது போலவே, ஆங்கில மொழியை இந்தி பேசும் மக்கள் மட்டுமின்றி, இந்தி பேசாத மாநிலங்களின் சாதா ரண மக்களும் எதிர்ப்பார்கள்.

இதுவரை தீர்வுகாணமுடியாத புதிராக உள்ள மொழிப்பிரச்னைக்கு நாம் ஏதாவது ஒரு தீர்வுகாண வேண்டுமானல், ஜனநாயக இந்தியா வில் ஒரு பொது ஆட்சிமொழி இருக்க முடியாது என்பதை அங்கீகரிக்கவேண்டும்.

## ஆட்சிமொழி பற்றி சரித்திரப் பின்னணி என்ன ?

நாடாளுமன்ற மக்கள் அவையில், பிரதமர் குறிப்பிட் டதைப்போல், ஆயிரமாயிரம் ஆண்டுகளாக ஒரு போதும் இந்தியாவிற்கு பொதுமொழி என்று ஒன்று இருந்ததில்லை; ஏனென்றல் ஒருபோதும் பொது அரசாங்கம் ஒன்று இருந்ததில்லை. வரலாற் றில் முதல் தடவையாக பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ்தான் இந்தி

பாவிற்கு ஒரு பொது அரசாங்கம் உருவாயிற்று அந்த அரசாங்கம் அன்றைய ஆட்சியாளர்களின் மொழியை பொதுமொழியாக்கியது. பிரதமர் தேசாய் பேசும் குறிப்பிடுகையில் சுதந்திரப்போராட்டம் நிகழ்ந்த காலத்தில். பொது எதிர்க்கு எதிராக போராடியபோது இந்தியை பொதுமொழியாக உபயோகிப்போம் என்று இந்தி பேசாத பாகங்களில் தேசபக்த மக்கள் அங்கீகரித்தனர் என்று கூறுகிறார். இது சுதந்திரம் அடைந்தபிறகும் தொடர்ந்தது என்றார்.

சரித்திர உண்மைகளை தொகுத்துப்பார்த்தால் தெரிவதென்ன? இந்தியாவின் பொதுமொழியாக இந்தியை தேச சுதந்திரத்திற்கு பிறகு ஏற்றுக்கொண்டது சுதந்திரப் போராட்டகால [illegible] மிச்சமீதியாகும்; இந்தியை ஒரு பொதுமொழியாக ஏற்றுக்கொண்டதானது சுதந்திரப் போராட்டவீரர்களுக்கு ஒரு ஆயுதமாக அன்று விளங்கியது; அந்த ஆயுதம் கொண்டுதான் இந்தியாவிலிருந்து தாங்கள் வெளியேறினால் நாடு சிதறுண்டு போகும் என்று பிரிட்டிஷார் அடித்துப்பேசிய அகந்தையை இந்திய சுதந்திரப் போராட்ட வீரர்கள் மறுத்தார்கள்.

இந்தப்பின்னணியில்தான், இந்திய அரசியல்சட்டத்தை உருவாக்கியவர்கள் சுதந்திரம் அடைந்த 15 வருட காலம் முடிவுற்றபிறகு, நாட்டின் ஆட்சி மொழியாக ஆங்கிலம் உள்ள இடத்தில் இந்தி ஏற்கப்படும் என்ற வரத்தை அச்சட்டத்தில் ஏன் சேர்த்துக்கொண்டார்கள் என்பதை புரிந்துகொள்ள முடியும்.

இவ்வாறு ஆங்கிலம் உள்ள இடத்தில் இந்தியை அமர்த்தும் திட்டத்திற்கான காலம் முடிவடைந்தவுடன் தான் அந்தத் திட்டம் எந்த அளவுக்கு உண்மைக்கு முற்றிலும் பொருந்தாதது என்று தெரியவந்தது. அரசியல் சட்டத்தில் இருந்த இந்தப் பகுதியை அமுல்நடத்தும் வகையில் ஆங்கிலத்திற்குப் பதிலாக இந்தியைத் திணிக்க முயன்றபோது தமிழ்நாட்டில் பெரும் ரத்தக் கிளர்ச்சியே எழுந்தது. இதன் பிரதிபலிப்பு இந்தி பேசாத ஏனைய பாகங்களிலும் சிறிதளவு இருந்தது. இந்நிலையை சமாளிப்பதற்குத்தான் அப்போதைய பிரதமரான லால்பகதூர்சாஸ்திரி இந்தி பேசாத மக்கள் விரும்பும் வரை ஆட்சிமொழியாக ஆங்கிலம் நீடிக்கும் என்று அவருக்கு முன்னதாக பிரதமராக இருந்தவர் அளித்த வாக்குறுதியை மீண்டும் அளித்தார்.

## ஜனநாயகத்தில் கடைப்பிடிக்க வேண்டியவை

அதற்குப்பிறகு பல வருடங்கள் கடந்து விட்டன.

இன்றைய பிரதமரும் அவருக்கு முன்பிருந்தவர்கள் அளித்த வாக்குறுதிகளை மீண்டும் வழங்கியுள்ளார். ஆனால், இந்த வாக்குறுதியை அமுல்படுத்துவதில் தீவிரமாகச் செயல்படுவதற்குப் பதிலாக பிரதமர் மொரார்ஜிதேசாயும் அவாது சக அமைச்சர்களும் நாட்டின் பொது மொழியாக உள்ள ஆங்கிலத்தை இந்தி பிடிக்கும் காலம் எப்போது என்பது பற்றிய பிரமையை வளர்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

• நமக்கு நாமே ஒன்றை ஞாபகப்படுத்திக் கொள்வோம். பிரிட்டிஷ் ஆட்சி நிர்வாகத்தில் நிகழ்ந்தது போல் அல்லாமல் சுதந்திர இந்தியாவில் அரசாங்க நிர்வாகம் ஜனநாயகரீதியானது; நிர்வாகத்தில் இந்த ஜனநாயக குணம்சம்நிலைநாட்டப்பட வேண்டுமானல் நிர்வாக வேலைகள் மக்களின் மொழிகளில்தான் இருக்கப்படவேண்டும்.

நாட்டின் எந்தவொரு பகுதியில் வசித்துக் கொண்டு எந்தவொரு மொழியும் பேசும், எந்தவொரு நபரும் மத்திய அரசாங்க நிர்வாகத்தில் சேர்ந்து பணிபுரியும் வாய்ப்பு இருக்க வேண்டும். அந்த ஆணோ அல்லது அந்தப் பெண்ணோ மத்திய அரசாங்கத்துடன் தொடர்பு கொள்ளும் போது தன் சொந்த மொழியில் எழுதப்பட்டிருந்தால் அது ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும், அதே மொழியில் அவர்களுக்கு பதில் அளிக்க வேண்டும்.

அதேபோல் எந்தவொரு நாடாளுமன்ற உறுப்பினரும் அகில இந்திய மாநாடுகள், கூட்டங்கள், விவாதங்களில் பங்கு கொள்ளும் போது அவரவர் சொந்த மொழியில் பேச சுதந்திரம் இருக்க வேண்டும். ஏனைய மொழிகளில் ஆற்றப்படும் உரைகளை அவர் புரிந்து கொள்ள அவை அவருடைய மொழியில் உடனடியாக மொழிபெயர்க்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும். இது ஒன்றுதான் அத்தகைய தேச ரீதியான விவாதங்களில் அவர்களை பயனுள்ள வகையில் பங்கேற்கச் செய்யும்.

சொந்த மொழியை மட்டும் படித்துள்ள அமைச்சர்கள், அதிகாரிகள் சம்பந்தப்பட்ட அரசாங்க பைல்கள் அவர்களது சொந்த மொழிகளிலேயே இருக்கும் வகையில் ஏற்பாடு இருக்க வேண்டும். அத்தோடு ஒரு குறிப்பிட்ட மொழியில் உள்ள விஷயத்தை தேவைப்பட்ட மொழியில் மொழிபெயர்க்

கவும் நிரந்தர ஏற்பாடு இருக்கவேண்டும். இது ஒன்றுதான் மக்கள் விரும்புகின்ற நிர்வாகத்தை ஏற்படுத்திட உதவும்.

இத்தகைய தேவை இருப்பதால்தான் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தன் வேலைத் திட்டத்தில் பின் வருமாறு அறிவித்துள்ளது.

"நாடாளுமன்றத்திலும் மத்திய அரசாங்க நிர்வாகத்திலும் அனைத்து மொழிகளுக்கும் சமத்துவம் என்பது அங்கீகரிக்கப்படவேண்டும்; நாடாளுமன்ற உறுப்பினர்கள் எந்தவொரு தேசியமொழியிலும் பேசுவதற்கு உரிமை இருக்க வேண்டும்; அது அனைத்து மொழிகளிலும் தெரிவிக்கப்படுவதற்த உடனடி மொழி பெயர்ப்பு இருக்க வேண்டும்; அனைத்துச் சட்டங்களும், அரசாங்க உத்திரவுகளும் தீர்மானங்களும் அனைத்து தேசிய மொழிகளிலும் கிடைக்கச் செய்ய வேண்டும்; இந்தி ஆட்சிமொழி என்பதை கட்டாயமாக்கக் கூடாது"

இதுவெல்லாம் கூடுதலான வேலையையும் செலவையும் ஏற்படுத்தாதா? ஆம்; நிச்சயம் ஏற்படுத்தும். ஆனால் பிரச்னைகள் மென்மேலும் சிக்கலாகக் கூடிய அபாயத்தோடு ஒப்பிடுகையில்இது பெரியவிஷயமே அல்ல.

ஒரு கேள்வி முன்னுக்கு வருகிறது. அது என்ன!

ஒவ்வொரு மொழிப் பிரிவினரும் நாட்டின் பிரிக்க முடியாத பகுதி என்பதால் ஒரு "இணைப்பு மொழி" இருப்பது அவசியமில்லையா? அது இந்தியைத் தவிர வேறு எத்த மொழியாக இருக்க முடியும் என்பதே அந்தக் கேள்வி.

இதற்கு எதிர் கேள்வி ஒன்று போடலாம். அது என்ன? "இணைப்பு மொழி" ஒன்றை உபயோகிக்க வேண்டிய கட்டாய நிலையில் நம் நாட்டு மக்களில் எவ்வளவுபேர் உள்ளனர்? அப்படியொரு இணைப்பு மொழியை உபயோகிக்க வேண்டியநிலையில் உள்ளவர்களில் இந்திபேசும் பகுதிகளோடு பழக வேண்டியவர்களின் விகிதாச்சாரம் என்ன?

ஒவ்வொரு மொழிபேசும் மக்களில், மிகப் மிகப் பெரும்பாலோர் தங்களுடைய வாழ்க்கையை தங்களுடைய சொந்த மாநிலத்திலேயே நடத்துகின்றனர் என்பதுதான் உண்மை;

அவர்களில் மிகச் சிறிய சதவீதத்தினரே நீண்டகாலத்திற்கு வேற்று மொழி பேசும் மாநிலங்களில் வாழவேண்டிய நிலையில் உள்ளனர். இவர்களில் கூட கணிசமானவர் பக்கத்து மாநிலத்திற்கோ அல்லது பகுதிகளுக்கோ செல்கின்றனர்; அந்த மாநிலத்தில் அல்லது பகுதியில் பொது உபயோகத்தில் இந்தி மொழி இருப்பதில்லை. வேறு மொழிகளே உள்ளன. ஆகையால் அந்த மொழிகளோடு அவர்கள் ஏற்கெனவே "தொடர்பு" கொண்டிருப்பார்கள் என்பதால் அம்மொழிகளைத்தான் அவர்கள் கற்கவேண்டும்.

உதாரணமாக கேரளாவை எடுத்துக்கொள்வோம். இம்மாநிலத்தின் மிகப்பெரும் பகுதியினர் தங்களுடைய வாழ்க்கையைச் சொந்த மாநிலத்திலேயே நடத்துகின்றனர். வேலை தேடி வெளிமாநிலங்களுக்குச் செல்பவர்களில் கணிசமான பகுதியினர் பக்கத்து மாநிலங்களான தமிழ்நாடு, கர்நாடகம் ஆகிய மாநிலங்களுக்கோ அல்லது பம்பாய், கல்கத்தா போன்ற பெரும் நகரங்களுக்கோ செல்கின்றனர். அவர்கள் இந்திமொழியை கற்றிருக்கவேண்டும் என்பது தேவையற்றது. அவர்கள், தங்களுடைய நடைமுறை வேலையோடு இணைந்திருக்காத இந்தியை இவர்கள் தெரிந்துகொள்ளவேண்டும் என ஏன் கட்டாயப்படுத்த வேண்டும்?

## "இணைப்பு" மொழி பற்றிய பிரச்னை

இந்தி பேசும் பகுதியில் உள்ள மக்களோடு தொடர்பு கொள்வோர் அனைத்து மொழிப் பகுதிகளிலும் உள்ளனர். ஆனால் அவர்கள் அந்தந்த மொழிப் பகுதியில் மிகக் குறைவானவர்களே. மேலும் பஞ்சாபி, குஜராத்தி, மராட்டியம் ஆகிய மொழிகள் இந்திக்கு நெருக்கமான மொழிகள். இம்மொழிப் பகுதிகளில் கூட அத்தியாவசிய இணைப்பு மொழியாக இந்தி இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. இத்தகையாக கருத்துக்களை மனதில் கொண்டே இந்தியக் கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தன்னுடைய வேலைத் திட்டத்தில் கூறியுள்ளதாவது.

"பொருளாதார, சமூக, கல்வி கலாச்சார உறவுகள் வளரும். காலப் போக்கில் இந்தியாவின் பல்வேறு மாநிலங்களை சேர்ந்த மக்கள் தங்களுடைய தேவைகளுக்கு மிகவும் பொருத்தமான ஒரு மொழியை உள் தொடர்புகளுக்காக தேர்ந்தெடுப்பார்கள். நிர்வாகம், சட்டம், நீதி ஆகிய துறைகளிலும் கல்வியிலும் இன்று போதன மொழி என்ற நிலையில் உள்ள ஆங்கிலத்தின் இடத்தை தேசிய மொழிகள் எடுத்துக் கொள்வதால் ஆங்கிலம் அகற்றப் படும்."

தாமாகவே ஏற்றுக்கொண்ட மொழி என்ற அடிப் படையைவிடுத்து "இணைப்பு மொழி" என்று பேசுவது கட் டாயத் திணிப்புக்கு ஒப்பாகும். ஒரு பொது மொழி உருவாவதில் கட்டாய முறைகள் புகுத்தப்படுமானால் (அது ஆங்கிலமானாலும் சரி இந்தியானாலும் சரி) அதற்கு எதிர்ப்பும் அதிகமாக வளரும். இதனால் நாட்டின் பல்வேறு மொழிப் பிரிவினரிடையே பிளவுகளை ஆழமாக ஏற்படுத்தும். பல்வேறு மொழியினரைத் தனித்தனியாக்கி விடும்.

ஆங்கிலத்தின் இடத்தை குறிப்பிட்ட காலத்தில் இந்தி பிடிக்கவேண்டும் என்பதற்கு ஆதரவு அளிப்பவர்களைப்போலவே காலவரையறையின்றி ஆங்கிலம் நீடிக்கவேண்டும் என்பதன் ஆதரவாளர்களும் உண்டு. இவர்கள் பல்வேறு மொழிப்பிரிவினரிடையே வேறுபாடு நீடிக்கச்செய்பவர்களாவர். அனைத்து மொழிகளுக்கும் சமத்துவம், இஷ்டபூர்வமான வழிவகைகளில் ஒரு இணைப்புமொழி உருப்பெறுவது இவைதான் சிக்கல்மிக்க மொழிப் பிரச்னைக்கு நியாயமான தீர்வை அளிக்கும்.

## மும்மொழித்திட்டம்

நாட்டின் ஒரு பொது ஆட்சி மொழிக்கான தேவை பற்றி பரிசீலனை அவசியப்படுவது போலவே

மும்மொழித்திட்டம் பற்றி எடுக்கப்பட்ட இந்த நிலைமையை பாரபட்சமில்லாதவகையில் பரிசீலனை செய்யவேண்டும். ஏனென்றால், மும்மொழித் திட்டம் என்பது சூழ்நிலையின் சிருஷ்டியாகும். அது என்ன சூழ்நிலை? இந்தி மொழியினரின் கோரிக்கைகளையும் இந்தி பேசாத இதர மக்களின் கோரிக்கைகளையும் இரு சாராரையும் திருப்திப்படுத்த விரும்பும் முயற்சியில் அன்றைய ஆட்சியாளர்கள் ஒரு பொதுமொழியென்று வாக்குறுதி அளிக்கும் நிலைக்குவந்தனர்.

அனைத்து இந்திய மொழிகளுக்கும் முழுமையான சமத்துவம் என்ற கொள்கையும் ஒரு இணைப்புமொழி தானாக உருவாகுவதற்கான நிகழ்ச்சி போக்குகளும் ஒப்புக்கொள்ளப்படுமானால் சொந்த மொழியில் தவிர ஏனைய மொழியில் கட்டாய போதனைமுறை இருப்பதற்கு அவசியமே இருக்காது. சொந்த மொழியில் கற்றபிறகு வேறு மாநிலங்களில் தங்கவோ மேல் படிப்பு பயிலவோ விரும்புபவர்கள் ஏனையமொழிகளை கட்டாயமாக படிக்க வேண்டியது அவசியம். ஆனால் ஒருவர் தன்னுடைய மொழியைத் தவிர வேறுமொழி ஒன்றை படிக்க விரும்புவாரேயானால் அவர் எந்த மொழியை விரும்புகிறார் என்பதை அவருடைய சொந்த முடிவுக்கே விட்டுவிட வேண்டும். இங்கே மீண்டும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் வேலைத் திட்டத்திலிருந்து மேற்கோள் காட்டுவோம்.

''கல்வி நிலையங்களில் போதனாமுறையை தாய்மொழியில் பெற மக்களுக்கு உரிமை இருக்க வேண்டும்; ஒரு குறிப்பிட்ட மொழி பேசும் மாநிலத்தின் பொதுத்துறை, அரசுத்துறை அலுவலகங்களிலும் அம்மாநிலத்தின் உயர்ந்தபட்ச கல்வி நிலையங்களின் போதனாமுறைகளிலும், தேசிய மொழியான அம்மாநில மொழியே உபயோகப்படுத்தப்பட வேண்டும்; தேவை ஏற்படும் மாநிலங்களில் சிறுபான்மை அல்லது சிறுபான்மையினரின் மொழி அல்லது அந்தப் பிரதேச மொழியும் அம்மாநில மொழியோடு சேர்த்து அமுல்படுத்துவதற்கான வசதிகள் கொண்டுவரப்பட வேண்டும்; உருது மொழியும் அதன் எழுத்து வடிவமும் காப்பாற்றப்பட வேண்டும்.''

மொழிப் பிரச்னைமீது மக்களின் ஆவேச உணர்வுகள் மீண்டும் கிளரப்படாமல் இருக்க வேண்டுமானால், இந்தி வெறியும் இந்தி எதிர்ப்பு வெறியும் உறுதியாக கட்டுப்படுத்தப்பட வேண்டுமானால் நாட்டின் சர்வாங்கத் திற்குத் தேவையான ஒரு பொதுமொழி என்ற திட்டமும் மும்மொழித் திட்டம் போன்ற சமரசத் திட்டங்களும் முற்றாகக் கைவிடப்படவேண்டும்.

---

தீக்கதிர் அச்சகம், மதுரை-18.

